[28th September 1961

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், வெளி நாட்டிற்கு சர்க்கரை ஏற்றுமதி செய்வதில் ஏற்படக்கூடிய நஷ்டத்தை சரிக்கட்டுவதற்கு வேண்டிய கரும்பு இத்தனை விலைக்குத்தான் விற்கப்பட வேண்டும் என்றும் இத்தனை சத விகிதம் குறைத்து விற்க வேண்டும் என்றும், அந்த முறையில் கரும்பு விலையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றும் மத்திய சர்க்கார் வெளியிட்ட ஒரு அறிக்கையில் வந்திருக்கிறது. அதனுடைய நோக்கம் என்ன ? அந்த அடிப்படையில் சர்க்கரையை குறைந்த விலைக்கு வாங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த முறையில் என்னுடைய அபிப்பிராயத்தை நான் முன்னமேயே தெரிவித்திருக்கிறேன். சர்க்கரையை குறைந்த விலைக்கு விற்க வேண்டுமானால் அது விவசாயிகளுக்கு கட்டுப்படியாகும்படியாக இருக்கவேண்டும். ஆலைகளுக்கும் லாபம் ஏற்படும் வகையில் விலையை நிர்ணயிக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த முறையில் ஏற்றுமதி செய்வதை விரிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதற்கு வேண்டிய பரிசீலனையும் செய்யப்பட்டிருக்கிறது. இதைப்பற்றியேதான் நான் முன்பே கூறியிருக்கிறேன். அதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடியதாக இருக்கிறது.

*Industries in North Arcot district*

* 1890-B Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வடாற்காடு ஜில்லாவில் என்னென்ன சிறிய பெரிய தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்படுமென்று திட்டமிடப்பட்டது ?

(இ) எதெது, எங்கெங்கே ஆரம்பிக்கப்பட்டது ?

(உ) எதெது ஆரம்பிக்கப்படவில்லை ? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் ஆரம்பிக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ), (இ) & (உ) Under the Second Five-Year Plan, the following industrial undertakings were proposed to be set up in the North Arcot district—

(1) A co-operative sugar mill.

(2) Service Centre for tanning and finishing of leather at Vinnamangalam.

(3) General Purpose Engineering Workshop, Vellore, and Government Cycle Assembly Unit, Vellore.

(4) An industrial colony at Katpadi.

The first three undertakings have gone into production. The industrial colony is expected to start functioning shortly.

SRI A. A. RASHEED : In view of the backwardness of the North Arcot district in industrialisation, will the Government consider the starting of more industries in the North Arcot district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : If entrepreneurs come forward, their applications will be considered with all sympathy and appreciation.